# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்  நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3  விளைச்சல் : 31  திருவள்ளுவர் ஆண்டு  2053  திசம்பர் –2022

## உள்ளே...


- விண்ணின் உடுக்களும் மண்ணின் மொழியே!
- பிரெஞ்சு அகராதியியல் ஓர் வரலாற்றுப் பார்வை
- MACRO STRUCTURE OF AMARAKOŚA AND TIVĀKARAM : A COMPARISON
- சங்க இலக்கியத்தில் ஆரியர்
- பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!










## கருவூலம் மற்றும் கணக்குத் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Cash on hand | – | கையிருப்புப் பணம் |
| Cash box | – | பணப் பெட்டி |
| Cheque writing machine | – | காசோலை வரைவுப் பொறி |
| Coin depot | – | நாணயக் கிடங்கு |
| Comptist | – | கணக்கீடு பொறி இயக்குபவர் |
| Currency note | – | பணத்தாள் |
| Currency chest | – | பணப்பேழை |
| Defaced coin | – | சிதைந்த நாணயம் |
| Guard rules | – | காவல் விதிகள் |
| Machinist | – | பொறி இயக்குபவர் |
| Managerial staff | – | மேலாண்மைப் பணியாளர் |
| Posting ledger | – | பதிவுப் பேரேடு |
| Posting register | – | பதிவு விளக்க ஏடு |
| Security register | – | காப்புப் பொருள் பதிவேடு |
| Strong room | – | காப்பு அறை |
| Sweated coin | – | புள்ளி நாணயம் |
| Transfer documents | – | மாற்று ஆவணம் |
| Wall coffer | – | சுவர்ப் பேழை |
| Automobile workshop | – | தானியங்கித் தொழிற்சாலை |
| Bacteriological laboratory | – | நுண்மவியல் ஆய்வுக்கூடம் |
| Mechanical expert | – | இயந்திர வல்லுநர் |
| Police guard | – | காவல்துறைக் காப்பு |
| Port fund | – | துறைமுக நிதி |
| Safe custody | – | சேமக் காப்பு |
| Excess payment | – | மிகையளிப்புத் தொகை |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 நளி (கார்த்திகை)
திசம்பர் – 2022





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அலைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai-28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# விண்ணின் உடுக்களும் மண்ணின் மொழியே!

சங்ககாலச் சான்றோர்கள் வானத்தையே தம் வீட்டின் கூரையாகக் கொண்டவர்கள். வானில் நாள்தோறும் நிகழ்கின்ற நிகழ்வுகளையும் மாற்றங்களையும் கூர்ந்துநோக்கி வானியல் தொடர்பான சிந்தனைகளைத் தம் மண்ணின் மொழியில் இயம்பியவர்கள். வானியலில் புலமை பெற்று விளங்கியவர்கள் கணியன்கள் எனப்பட்டனர். இவர்கள் அரசருடன் இருந்த புலவராகவும். உயர் அலுவலராகவும் விளங்கினர். கணியன் பூங்குன்றனார், கணிமேதாவியார், நன்கணியார் முதலிய பெயர்கள் இதற்குச் சான்று பகர்கின்றன. சிலப்பதிகாரத்தில் பெருங்கணி என்ற சொல் ஆளப்பட்டுள்ளது. சிலேட்டர் என்ற வானியல் அறிஞர் தமிழருடைய வான்கணித முறையே எல்லாக் கணிதங்களிலும் சிறப்பானது என்கிறார்.

"பங்குனி மாதத்தின் முதல் பதினைந்து நாள்களுக்குள் மேடராசியின் கார்த்திகை நட்சத்திரத்தில் ஓர் இரவில்13நட்சத்திரங்களும் ஒளிவிட்டுச் சுடரும். அப்போது உத்திர நட்சத்திரம் உச்சியில் காயும். அதற்கு எதிராக மூல நட்சத்திரம் எழும். அவ்வேளை மிருகசீரியம் மேற்கே சாய்ந்து மறையும். அப்பொழுதில் விளக்கு போல் தோன்றும் ஒரு நட்சத்திரம் கிழக்குக்கும் போகாமல் வடக்குக்கும் போகாமல் வடகிழக்காகப் பாய்ந்து சிதறும். இது நிகழ்ந்து ஏழாம் நாள் மன்னர் இறப்பார்" என்றார் சோதிடர். அவ்விதமே மன்னரும் இறந்தார். இது இன்று நிகழ்ந்த நிகழ்வல்ல. 2000 ஆண்டுகளுக்கு முன் நடந்தது. அந்தச் சோதிடர் மதுரைக் கூடலூர் கிழார் எனும் புலவர். அம்மன்னன் சேரமன்னன் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை.

கோள்களின் இயக்கத்திற்கும் உயிர்களின் வாழ்வுக்குமான இத்தகைய நுண்ணிய தொடர்பை அக்காலத்தில் அறிந்தது எப்படி சாத்தியம்!. இயற்கையை உற்றுநோக்கியதால் வந்த அறிவு; இயற்கையோடு இயைந்து வாழ்ந்ததால் வந்த அறிவு; இயற்கையைப் போற்றிப் பாதுகாத்ததால் பெற்ற புலனறிவு. "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்பார் தொல்காப்பியர். பயனிற் சொற்கள் ஏதுமில. சொற்களுக்குப் பொருளையும் காரணத்தையும் உணர்த்தும் வகையில் அருந்தமிழில் பெயரிட்டனர். புறநானூற்றின் முதல் பாடலே நிலவின் இளம்பிறை என வான்பொருளின் பெயரால் தொடங்குகின்றது. சொல்லோவியமாம் சிலம்பும் "திங்களைப் போற்றுதும், ஞாயிறு போற்றுதும்" என்றே தொடங்குகிறது. 20ஆம் நூற்றாண்டில் நாம் கண்டு வியக்கும் செய்திகளை 8ஆம் நூற்றாண்டில் வாதவூரடிகளால் எவ்வாறு கூறமுடிந்தது!

திருவாசகத்தில் திருவண்டப் பகுதியில் இன்றைய அறிவியல் ஆய்வாளர்கள் ஒப்புக் கொண்டுள்ள பேரண்டவியல் கருத்துகளை எவ்வளவு அழகுற மாணிக்கவாசகர் கூறியுள்ளார்.

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்

அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி"

உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்னும் புலவர் சோழநாட்டின் அறிவு வளத்தைப் பாராட்டும்போது செஞ்ஞாயிறு செல்லுகின்ற வழியும் அவ்வியக்கத்தால் சூழப்படும் பார்வட்டமும், காற்று இயங்கும் திசையும், காற்றின் வெற்றிடமாக உள்ள வானம் ஆகியவைகளை நேரில் கண்டவர் போலச் சொல்லுகிறார்.

"செஞ்ஞாயிற்றுச் செலவும் அஞ்ஞாயிற்றுப்

பரிப்பும் பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்

வளிதிரி தரு திசையும்"

(புறம்.30)

"மதியம் கெடுத்த வயமீன் எனத்தம்பி
மாழார்ந்து

உதிதற்கு உரியான் பணியாள் உடன்
ஆயவாறும்"

சீவகசிந்தாமணி 23

கார்த்திகை விண்மீன் அழல் எனக் குறிக்கப்படுகிறது. தீச்சுடரின் நுனிபோன்ற அமைப்பில் ஆறு விண்மீன்களைக் கொண்டது கார்த்திகை. அங்கி, அழல், ஆறுமீன், ஆஅல், ஆரல், எரி, தழல் எனப் பல பெயர்களால் இவ்விண்மீன் வழங்கப்படுகிறது. விண்மீன்களின் மறுபெயர் உடுக்கள். மங்குல் முகிலாகும்.

"திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்

விண்ணோடும் உடுக்களோடும்

மங்குல் கடல் இவற்றோடும் பிறந்த தமிழுடன்

பிறந்தோம் நாங்கள்"

திங்கள், செழும்பரிதி, உடுக்கள் எனப் புரட்சிக்கவியின் வரிகளின் அழகைப் பார்க்கும்போது இச்சொற்கள் எல்லாம் நம் வழக்கில் வாழும் என்பதில் ஐயமில்லை. கதிரவனின் நடுப் பகுதியில் வெப்பம் கனன்று கொண்டிருப்பதை நற்றிணை, "அகங்கனலி" என்கிறது. சூரியன், நிலவுலகு (பூமி), வியாழன், அறிவன் (புதன்), காரி (சனி) போன்றன பற்றியும், துணைக்கோளான திங்கள் பற்றியும் சங்க இலக்கியத்தில் செய்திகள் காணப்படுகின்றன.

"நீள்நிற விசும்பின் வலன் ஏற்பு திரிதரும்

நாள்மீன் விராஅய கோள்மீன் போல"

(ப.பாலை. 67-68)

இப்பாடலடிகள் வானில் உள்ளவற்றை நாள்மீன் என்றும், கோள்களைக் கோள்மீன் என்றும் குறிக்கின்றன. நிலவுலகு (பூமி) வான் மண்டிலத்தில் ஒரு கோளாகும். திருமுருகாற்றுப்படையில் இடம்பெறும் "வலனேர்பு திரிதரு" என்பது சூரியனின் இயக்கம் பற்றியதாகும். அறிவன் (புதன்) பற்றிய செய்திகள் பரிபாடலில் இடம்பெறுகின்றன. "புந்தி மிதுனம் பொருந்த" என்ற பாடலடி அறிவன் (புதன்) கோளைப் பற்றியதாகும். வெள்ளி வெண்மீன், சீர்சால் வெள்ளி என்று சங்கப் பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது.

"வெள்ளி தென்புலத்து உறைய விளைவயல்

பள்ளம் வாடிய பயன்இல் காலை"

(புறம். 388)

வெள்ளிமீன் விடியற்காலையில் வானத்தில் தோன்றும் காட்சியை, "வைகுறு மீனின் தோற்றம்" என்று அகநானூறு கூறுகிறது. செவ்வாய் "செம்மீன்" என்றும், பரிபாடலில் "படிமகன்" என்றும் சுட்டப்பெறுகின்றது.

"தேட்கடுப்பு அன்ன நாட்படுதேறல்

கோண்மீன் அன்ன பொலங்கலத்து அளைஇ"

புறம்.392

பொலங்கலம் உள்ள கள் என இக்கோள் மீன் உவமையாகச் சுட்டப்பெறுகிறது. காரிக் (சனி)கோள் "மைம்மீன் புகையினும்" என்று புறம் 117இல் குறிக்கப்பட்டு, மைம்மீன் புகையினும் கடுமையான கோள் எனப்படுகிறது.

கிரகணம் என்ற வடசொல்லின் வேர்ச்சொல் கரவணம் ஆகும். கரத்தல் என்றால் மறைத்தல். "காக்கை கரவா கரைந்துண்ணும்" என்கிறது குறள் (527). நிலவோ, நிலவுலகோ (பூமியோ) சூரியனை மறைப்பதால் கரவணம் ஆனது. மதி, நிலா எனத் தமிழ் இலக்கியங்களில் அதிகம் பேசப்பட்ட திங்களைச் சந்திரன் என்று வடசொல்லால் அழைக்கின்றோம்.

வள்ளலார் வழங்கிய அருட்பெருஞ்சோதி அகவல் வரிகளில் மிக அழகாக வான் பற்றிய செய்திகளைக் கூறியுள்ளார்.

"புனன்மேற் புவியும் புவிமேற் புடைப்பும்

அனன்மேல் வகுத்த அருட்பெருஞ்சோதி!"

நீரின்மேல் நிலவுலகும் (புவியும்), நிலவுலகின் மேல் மலைகளும், நிலப்பரப்பும் இவை அனைத்தும் நெருப்பின் மேல் நிலைத்திருக்கும்படி இயற்கை வகுத்துள்ளது என்கிறார் வள்ளலார் பெருமகனார்.

விண்மீனுக்கும் நாள்மீன், உடு, வான்மீன் எனப் பல பெயர்களுண்டு. நட்சத்திரங்களும் அதன் இன்தமிழ்ப் பெயர்களும்

| | |
|---|---|
| அசுவினி | - புரவி |
| பரணி | - அடுப்பகம் |
| கார்த்திகை | - ஆரல் |
| உரோகினி | - சகடு |
| மிருகசீரிடம் | - மான்றலை |
| திருவாதிரை | - மூதிரை |
| புனர்பூசம் | - கழை |
| பூசம் | - கொடிறு |
| ஆயில்யம் | - அரவு |
| மகம் | - கொடுநுகம் |
| பூரம் | - கணை |
| உத்திரம் | -உத்திரம் |
| அத்தம் | -கை |
| சித்திரை | -அறுவை |
| சுவாதி | -விளக்கு |
| விசாகம் | - முறம் |
| அனுடம் | -பனை |

| | |
|---|---|
| கேட்டை | –துளங்கொளி |
| மூலம் | –குருகு |
| பூராடம் | –உடைகுளம் |
| உத்திராடம் | –கடைக்குளம் |
| திருவோணம் | –முக்கோல் |
| அவிட்டம் | –காக்கை |
| சதயம் | –செக்கு |
| பூரட்டாதி | –நாழி |
| உத்திரட்டாதி | –முரசு |
| ரேவதி | – தோணி |

தமிழ் என்றால் எளிமை; தமிழ் என்றால் அழகு; தமிழ் என்றால் அமிழ்தம். எத்தனையோ மொழிகள் உலகில் காலவெள்ளத்தைக் கடக்க முடியாமல் அழிந்துபட்டன. ஆனால் நம் தாய்மொழியாம் தமிழ்மொழி இயற்கை சார்ந்தது; இயல்பு சார்ந்தது; அறிவியல் சார்ந்தத ; அறம் சார்ந்தது; பக்தி சார்ந்தது; பகுத்தறிவு சார்ந்தது; காரணம் சார்ந்தது; கருத்தாழம் மிக்கது. சொல்லும் பொருளும் வேறாய் இல்லாமல் தொடர்புடையதாய் விளங்கும் செம்மாந்த மொழி நம் தமிழ்மொழி.

இத்தகு சிறப்புமிகு அன்னைத் தமிழாம் அருந்தமிழின் மேம்பாட்டுக்காக இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற அகராதிப் பணி மற்றும் கலைச்சொல்லாக்கப் பணி உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "பிரெஞ்சு அகராதியியல் ஓர் வரலாற்றுப் பார்வை" என்னும் பொருண்மையில் சென்ற இதழில் வெளிவந்த கட்டுரையின் தொடர்ச்சியும், அகராதியியல் அறிஞர் முனைவர் வ. ஜெயதேவன் அவர்களின் MACRO STRUCTURE OF AMARAKOŚA AND TIVĀKARAM : A COMPARISON என்னும் பொருண்மையிலான ஆங்கிலக் கட்டுரையும், தூயநெஞ்சக் கல்லூரித் தமிழ் முதுகலை (ம) ஆய்வுத்துறைத் (சுயநிதிப்பிரிவு) தலைவர் முனைவர் பி. பாலசுப்பிரமணியன் அவர்களின், "சங்க இலக்கியத்தில் ஆரியர்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும் என்உள்ளார்ந்தநன்றியைஉரித்தாக்குகிறேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

## ஆடை – ஒருபொருட் பன்மொழி

| | |
|---|---|
| அம்பரம் | சவளி |
| அறுவை | சீரை |
| உடுப்பு | துகில் |
| உடை | துணி |
| கலிங்கம் | பட்டம் |
| கோடி | படாம் |

# பிரெஞ்சு அகராதியியல்
## ஓர் வரலாற்றுப் பார்வை

தொடர்ச்சி



அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம், பாரிசு

### பிரித்தானியா

பிரித்தானியாவில் இரு மொழி அகராதிகள் புலம்பெயர் தமிழர்களால் தொகுக்கப்படவில்லை. ஏனெனில் முன்னரே ஆங்கிலம் – தமிழ் அகராதிகள் அறுபத்திரண்டும், தமிழ்–ஆங்கில அகராதிகள் இருபத்தொன்றும் தொகுக்கப்பட்டிருந்ததனால் அவசியம் ஏற்படவில்லை.

### ஐரோப்பாவில் தொகுக்கப்பட்ட அகராதிகள்

பிரான்ஸ் நாட்டில் 1968ஆம் ஆண்டிலிருந்து புதுச்சேரித் தமிழர்கள் வாழ்ந்து வருகின்றன். ஆனால் 1975ஆம் ஆண்டின் மத்தியில்தான் ஒருசில இலங்கைத் தமிழர் பிரான்ஸில் காலடி எடுத்து வைத்தனர். சில ஆண்டுகள் கழித்து 1980ஆம் ஆண்டளவில் நிறையபேர் வந்தனர், பின்னர் 1983ஆம் ஆண்டிலும் அதன் பின்னரும் பெருமளவு இலங்கைத் தமிழர் பிரான்ஸ் வந்துசேர்ந்தனர். இப்போது அவர்களின் எண்ணிக்கை ஒரு இலட்சத்தையும் தாண்டிவிட்டது. இலங்கைத் தமிழர் பிரான்ஸிற்கு வந்தபின்னர்தான் பிரெஞ்சு – தமிழ் அகராதி, தமிழ்வழி பிரெஞ்சு இலக்கண நூல்களின் தேவை ஏற்பட்டது. அத்தேவைகளை நிறைவேற்ற இலங்கைத் தமிழர்களே இவ்வகையான நூலாக்க முயிற்சிகளில் ஈடுபட்டனர். ஏற்கெனவே பிரெஞ்சு மிஷனரியினரால் இருவழி பிரெஞ்சு – தமிழ் அகராதிகள் 1911ஆம் ஆண்டில் தொகுக்கப்பட்டிருந்தன. அவ்வகராதியின் சொற்களும் அவற்றிற்கான பொருள் விளக்கமும் கத்தோலிக்க மதச்சொற்களாகவே விரவிக் காணப்பட்டன. இவ்வகராதியின் பிரதிகளும் கிடைப்பதற்கு அரிதானவையாகவே இருந்தன.

### பிரான்ஸில் வெளியான இருமொழி அகராதிகள்

* பிரெஞ்சு – தமிழ் அகராதி Dictionaire: francais – tamoul 1986 இல் பாரிஸ் நகரத்தில் உள்ள Ecole de Tamoul நிறுவனத்தினால் வெளியிடப்பட்டது. தமிழ் மொழியுடன் இணைந்த இரு மொழியகராதிகளில் பிரான்சில் வெளிவந்த முதல் அகராதி இதுவாகும். இதில் ஈழத்தமிழ் இந்தியத் தனித்தமிழ் எனச் சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வகராதி சதாசிவம் சச்சிதானந்தம் அவர்களால் தொகுக்கப்பட்டது.

* பிரெஞ்சு – தமிழ் அகராதி 1995 இல் சண்முகசுந்தரம் என்பவரால் வெளியிடப்பட்டது.

*பிரெஞ்சு – இலங்கைத்தமிழ் நடைமுறை அகரவரியை Dictionnaire pratique: francais tamoul srilankais எனும் அகராதி 1997 இல் பாரிசில் L' Harmattan என்ற பிரெஞ்சு பதிப்பகத்தினால் வெளியிடப்பட்டது, இதனைத் தொகுத்தவர் சதாசிவம் சச்சிதானந்தம்.

* தே.பிரலாதன், வசந்தி பிரகலாதன் எனுமிருவர் இணைந்து தமிழ் – பிரெஞ்சு இருவழி அகராதி பாரிஸ் நகரில் வெளியிட்டுள்ளனர்.

* Dictionnaire Moderne Francais–Tamoul தற்கால அகராதி என்ற பிரெஞ்சு – தமிழ் அகராதியை நாகராஜன் என்பவர் 2005இல் பாரிசில் வெளியிட்டுள்ளார்.

*பிரெஞ்சு – தமிழ் பொருள்வரிசை சொல்லகராதி Vocabulaire thematique francais tamoul. தமிழ் – பிரெஞ்சு பொருள்வரிசை சொல்லகராதி Vocabulaire thematique tamoul – francais என்பன சதாசிவம் சச்சிதானந்தம் அவர்களால் தொகுக்கப்பட்டு, L'ophrys எனும் பதிப்பகத்தினால் 2010 இல் பாரிஸ் நகரில் வெளியிடப்பட்டது.

• தமிழ் – ஆங்கிலம் – பிரெஞ்சு பொருள்வரிசை மும்மொழிச் சொல்லகராதி Vocabula thematique tamoul–anglais–francais சதாசிவம் சச்சிதானந்தம் அவர்களால் தொகுக்கப்பட்டு, Gnana எனும் பதிப்பகத்தினால் 2010 இல் பாரிஸ் நகரில் வெளியிடப்பட்டது.

பிரான்சில் வெளியான பிரெஞ்சு–தமிழ் அகராதிகளை ச.சச்சிதானந்தம். ப.சண்முகசுந்தரம், இணையர் பிரகலாதன் – வசந்தி, எச்.நாகராஜன் ஆகியோர் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள். இவர்களில் சச்சிதானந்தம், பிரகலாதன் – வசந்தி ஆகியோர் இலங்கையர்கள். மற்ற இரு தொகுப்பாளர்களும் புதுச்சேரிக்காரர்கள். இந்நால்வரும் சில பிரெஞ்சுச் சொற்களுக்குப் பொருள் விளக்கம் கொடுக்கும் போது அவர்களின் அறிவுக்கேற்பவே சொற்களைக் கையாண்டிருக்கிறார்கள்.

| பிரான்சில் வெளியான அகராதிகள் | Pain | Parler | Sucre |
|---|---|---|---|
| அகரமுதலி: பிரெஞ்சு - தமிழ் ச.சச்சிதானந்தம் | *nm* திரளப்பம் (பாண்,ரொட்டி) | *vi* கதை, பேசு | *nm* சர்க்கரை(சீனி), சர்க்கரை (சீனி)க்கட்டி |
| கையகராதி பிரஞ்சு-தமிழ்,தமிழ்-பிரஞ்சு ப.சண்முகசுந்திரம் | *n.m* ரொட்டி | *v.t.* பேசு | *n.m.* சர்க்கரை |
| அகராதி பிரஞ்சு - தமிழ், தமிழ் - பிரஞ்சு பி.வசந்தி, தே.பிரகலாதன் | *n.m.* பாண் | *v.intr* கதைத்தல், பேசுதல் | *n.m.* சீனி |
| தற்கால பிரெஞ்சு மொழி அகராதி பிரெஞ்சு - தமிழ் எச்.நாகராஜன் | *nf* ரொட்டி | பேசு | *n.m.* சர்க்கரை |

Pain என்ற பெயர்ச்சொல்லுக்குச் சண்முகசுந்தரமும், நாகராஜனும் ரொட்டி எனவும், பிரகலாதன் இணையர் பாண் எனவும், சச்சிதானந்தம், திரளப்பம், பாண், ரொட்டி என மூன்று சொற்களைக் கொடுத்திருக்கின்றார். இந்தியாவில் பொதுவாக வழங்கப்படுகின்ற ரொட்டியும், இலங்கையில் வழங்கப்படுகின்ற ரொட்டியும் ஒரே பொருளைக் குறித்து நிற்கவில்லை. அச்சொல் இருநாடுகளிலும் வெவ்வேறு பொருளைக் குறித்து நிற்கின்றன. ஆனால் ரொட்டி, பாண் ஆகிய இரு சொற்களும் தமிழ்ச்சொற்கள் இல்லை. ரொட்டி இந்திச் சொல், பாண் போர்த்துக்கேயச் சொல். அதற்குரிய தமிழ்ச்சொல் திரளப்பம் எனப் பாவாணர் கூறிச்சென்றார். பாண் என்றால் இந்தியத் தமிழர்களுக்குப் புரியாது, ரொட்டி என்றால் இலங்கையர்களுக்கு பாண் என விளங்காது. அகராதியைத் தொகுப்பவர்கள் பயனாளர் யார் எனத் தெரிந்து சொற்களுக்குப் பொருள்விளக்கம் கொடுக்கவேண்டும். இவ்வாறே Parler என்ற வினைச் சொல்லுக்குப் பேசுதல் என இந்தியத் தமிழிலும், கதைத்தல் என இலங்கைத் தமிழிலும் பொருள்படும்.

பிரான்ஸ் நாட்டில், ஒரு பெருந்தொகையான அகராதிகள், வெவ்வேறு வயதினர்க்காகவும் பல்வேறு தேவைகளுக்காகவும் உருவாக்கம் பெறுகின்றன. பயன்பாட்டாளர்களின் வாசிப்புப் பழக்கத்தைப் பொறுத்து அகராதிகளின் பயன்பாடு முக்கியத்துவம் பெறுகின்றது. மொழிகளின் அகராதிகளை எல்லாம் அகராதியில் இடம்பெறும் மொழி, சொல், சொற்களின் பொருள் வரையறை இயல்பு, பயன்பாட்டாளரின் நோக்கம், காலம், பதிவுகளின் நிரல், குறிப்பிட்ட துறை, உருவாக்க நெறிமுறைகள் ஆகியவற்றின் அடிப்படைகளில் அகராதிகள் வகைப்படுத்தப்படுகின்றன.




| | | |
|---|---|---|
| மொழி அகராதிகள் | கலைக்களஞ்சிய அகராதிகள் | படவிளக்க அகராதிகள் |
| பொருள், படங்கள், வரைபுகள், சிறபபுப்பெயர்கள் | சொற்பொருள் தகவல் குறிப்பு | (வண்ணப்) படங்கள் |
| Le Petit Larousse. .. | Encyclopédie de Diderot | Dictionnaire visuel |

அகராதிகள் **Dictionnaires**

2). ‘ பயன்பாடு ’

| பயிற்றல் அகராதிகள் | சிறப்பு அகராதிகள் | துறைசார் அகராதிகள் |
| --- | --- | --- |
| **Dictionnaire d‘apprentissage** | **Dictionnaire de spécialisé** | **Dictionnaire de spécialité** |

| பயிற்றல் அகராதிகள் | சிறப்பு அகராதிகள் | துறை அகராதிகள |
| --- | --- | --- |
| Le français langue étrangère - Larousse | Dictionnaire de synonymes | Dictionnaire de sexualité |

3). ‘ மொழிகளின் எண்ணிக்கை ’

| ஒருமொழி அகராதிகள் | இருமொழி அகராதிகள் | பன்மொழி அகராதிகள் |
| --- | --- | --- |
| **Dictionnaire monolingue** | **Dictionnaire bilingue** | **Dictionnaire multilingue** |
| பிரெஞ்சு – பிரெஞ்சு | பிரெஞ்சு – தமிழ் | பிரெஞ்சு – ஆங்கிலம் - ஜேர்மன் |
| Le Petit Robert. . . | Le dictionnaire : français - tamoul | Le calopin : 11 மொழிகள் |

4). ‘ சொற்களின் எல்லை ’

| சிறப்பெல்லை அகராதிகள் | பொது அகராதிகள் | பன்மொழி அகராதிகள் |
| --- | --- | --- |
| **Dictionnaire différentiel** | **Dictionnaire Général** | **Dictionnaire portatif** |
| பிரெஞ்சு – பிரெஞ்சு | பிரெஞ்சு – தமிழ் | பிரெஞ்சு – ஆங்கிலம் - ஜேர்மன் |
| Le Petit Robert. . . | Le dictionnaire : français - tamoul | Le calopin : 11 மொழிகள் |

## அகராதிகள் காலக்கண்ணாடிகள்

## காலத்தால் பொருள் மாறும் சொற்கள்

காலத்துக்குக்காலம் அகராதியியலாளர்கள் அகராதி அமைப்பு, உள்ளடக்கம் பற்றிய விளக்கங்களை விரித்து வளம்படுத்தி வந்திருக்கிறார்கள், வருகிறார்கள். அகராதிகள் மொழிகளின் காலக்கண்ணாடிகளாக விளங்குபவை என்பதனைக் கீழ்வரும் எடுத்துக்காட்டுகள் விளக்கும். Enerver எனும் சொல் வெவ்வேறு காலப்பகுதிகளில் சிறிது வேறுபட்ட பொருளை உடையனவான இருக்கின்றன.

– Enerver 1... 2... 3...)

| **Enerver–1690**<br>*அசைக்குறி இல்லை* | **Énerver - 1905**<br>*அசைக்குறி இல்லை* | **Énerver – 2005**<br>*அசைக்குறி இல்லை* |
|---|---|---|
| *v.act.* Faire perdre aux nerfs leur force, leur usage, leur fonction, soit en les coupants , ou en lzs affoiblissant par les ou par quelque autre violence. – *Dictionnaire universel. Furétière.*<br><br>*இலக்கணக்குறிப்பான் :*<br>**v.act.** *செய்வினை.*<br>நரம்பைவெட்டி/பலவீனப்படுத்தி/ வன்செயலால்பலத்தைக் குறைத்தல். | v.a. ( de é priv. et du lat. *nervus*,nerf). Brûler les tendons des muscles,des jarrets et des genoux: Détruire l'énergie physique ou morale - *Petit Larousse illustré.*<br><br>*இலக்கணக்குறிப்பான் :*<br>***v.a.*** *செய்வினை. (இலத்தீன்* மூலம் *nervus, nerf*) தசைநாரை எரித்தல்/உடல்/ மனப்பலத்தைக் அழித்தல். | v.t. (lat.*enervare*, couper les nerfs).Susciter la nervosité. L'irritation de ; agacer,exciter? Absol. Un bruit qui énerve. S'énerver v.pr. Perdre le contrôle de ses nerfs; s'impatienter. Restons calmes, ne nous énervons pas. -*Petit Larousse illustré.*<br><br>*இலக்கணக்குறிப்பான் :*<br>***v.t.****செயப்பாட்டுவினை(இலத்தீன்* மூலம் *enervare, couper nerf*) எரிச்சல் உண்டாக்குதல். உணர்ச்சி ஏற்படுத்துதல்.<br>***v.pr.*** *தற்றொடர்பு வினை* கட்டுப்பாடு இழத்தல், பொறுமையின்றி இருத்தல். அமைதியாக இருப்போம். கோபப்படாமல் இருப்போம். |

## ஒரே சொல்லுக்குப் பல பொருள்விளக்கம் வேறுபட்ட அகராதிகள்

–Main –கை

சொற்களுக்கான பொருள் விளக்கம் அகராதிகளையும் காலத்தையும் பொறுத்து வேறுபடுகின்றன. எடுத்துக்காட்டாக, கை என்பதை பிரெஞ்சில் மா(ன்) என்பர். இந்தச் சொல்லுக்கான விளக்கங்கள் மூன்று அகராதிகளில் நோக்கம் என்பதைப் பொறுத்து விளக்கங்கள் வித்தியாசமாகக்

கொடுக்கப்பட்டிருக்கின்றன. மூன்று அகராதிகளிலும் **Main** எனும் சொல் பெண்பாற் பெயர்ச்சொல் என **n.f** எனும் இலக்கணக்குறிப்பான் சுட்டுகிற தன்மை பொதுவாகக் காணப்படுகின்றது.

– பிரெஞ்சைத் தொடக்க நிலையாகக் கொண்டவர்களுக்கு(சிறுவர்களுக்கு) என 1963இல் வெளிவந்த **1. Larousse** பதிப்பக வெளியீடான **Larousse des débutants** அகராதி: **Partie du corps, du poignet au bout des doigts** விரல்களிலிருந்து மணிக்கட்டு வரைக்குமான உடலின் பாகம் என முதல் விளக்கம் கொடுத்துவிட்டு, கை என்பது மரபுத்தொடர்களாகச் சொற்றொடர்களுக்கு, கூட்டுச்சொற்களுக்கு விளக்கம் கொடுக்கின்றது. **Forcer la main** கட்டாயப்படுத்துதல். **A main armée** ஆயுதம் வைத்திருக்கும் கை என 9 – 10 பொருள் விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கின்றது...

– பொதுவிளக்க அகராதிகளில் ஒன்றான 1985இல் வெளிவந்த 2 **Larousse** பதிப்பக வெளியீடான **Maxi – débutants Larousse** அகராதி **la main droite** – வலது கை, **la main gauche** – இடது கை என முதல் உதாரணம் கொடுத்துவிட்டு, கை என்பது மரபுத்தொடர்களாக வரும் சொற்றொடர்களுக்கு, கூட்டுச்சொற்களுக்கு விளக்கம் கொடுக்கின்றது. 8. **en main** கையில் எடுத்தல்(பொறுப்பு). 11. **Passer la main** கை மாறுதல் (ஒப்படைத்தல்). **main d'oeuvre** வேலையாட்கள்(கூலி) என 15 பொருள் விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கின்றது...

– பிரெஞ்சை இடை நிலையாகக் கொண்டவர்களுக்கு என 1986இல் வெளிவந்த 3. **Bordas** பதிப்பக வெளியீடான **Le tour du mot**– அகராதி **Partie du corps située a' l'extremité du bras** : மேற்கையின் வெளிநீட்டமாக அமைந்த உடலின் பாகம், **comme les cinq doigts de la main** – கையின் ஐந்து விரல்கள் போல. **Serrer la main** – கை குலுக்குதல். **Donner un coup de main** – கை கொடுத்து உதவுதல். **Mainmise n.f.** கையகப்படுத்தல்.

## சிறுவர் பிரெஞ்சு அகராதிகள்
## Les dictionnaires français pour les petits

1வயதிலிருந்து 4வயது வரையிலான குழந்தைகளுக்கே அகராதியைப் பிரெஞ்சு அகராதியியல் கலைஞர்கள்உருவாக்கியிருக்கிறார்கள்என்றால் அகராதிகளின் முக்கியத்துவமும் தேவையும் வெளிப்படையாகத் தெரிகிறது. இக்குழந்தைகளுக்கென 1000 அடிப்படைச்சொற்கள் கொண்டு Dictionnaire de bébé குழந்தைகள் அகராதி 1985 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டிருக்கின்றது. இந்த வயதினருக்காக Larousse அகராதி நிறுவனம் 2000 சொற்களுடன் 2000 படங்கள் உள்ள Mon Premier Larousse எனும் பெயரில் ஓர் அகராதியை வெளியிட்டிருந்தது. இதைவிட இரண்டு வயது, மூன்று வயது, 4 வயதுக் குழந்தைகளுக்கும் அகராதிகள் தனித்தனியாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன.

| Larousse | Robert |
| --- | --- |
| **Mon Premier Larousse - 1- 4** வயதுச் சிறுவர்களுக்கு 2000 சொற்களுடன் 2000 படங்கள் | Le Robert Benjamin - 5- 8 வயதுச் சிறுவர்களுக்கு 6.500 சொற்கள் |
| **Dictionnaire Super Major** 9-12 வயதுச் சிறுவர்களுக்கு 23800 சொற்கள் | Le Robert Benjamin - 8- 11 வயதுச் சிறுவர்களுக்கு சிறப்புப்பெயர்கள் - 4.000 சொற்கள் |
| | Le Robert Collège – றொபேர் நடுநிலைப் பள்ளி மாணவர்களுக்கு ஆனது. 40 000சொற்கள்.பக்கங்கள் 1483 |
| | |

**Collège** நடுநிலைப் பள்ளி மாணவர்களுக்கான அகராதிகள் - போட்டிப் பதிப்பகங்கள்

| Larousse du Collège | Le Robert Collège | Dictionnaire Hachette Collège |
| --- | --- | --- |
| -11-15 வயதினருக்கானது.<br>-41.000 பொதுப்பெயர்கள்,<br>-7500 சிறப்புப்பெயர்கள்.<br>- கலைக்களஞ்சிய அகராதி | - 11 – 15 வயதினருக்கானது.<br>- 40.000 சொற்கள்.<br>- 6500 சிறப்புப்பெயர்கள்<br>- கலைக்களஞ்சிய அகராதி | - 10 – 15 வயதினருக்கானது.<br>- 33.000 சொற்கள்.<br>- 3000 சிறப்புப்பெயர்கள்<br>- கலைக்களஞ்சிய அகராதி |

அகராதிகள், பெரியகராதிகள் 6 இலிருந்து 8 வயதுடைய மாணவர்களுக்கான முதல் அகராதியில் 20,000 சொற்களும், 9 இலிருந்து 12 வயதுடைய மாணவர்களுக்கான பள்ளி அகராதியில் 23,800 சொற்களும், 11 வயதிலிருந்து 15 வயது வரையான மாணவர்களுக்கான அகராதியில் சொற்பிறப்பியல் விளக்கத்துடன் 40, 000 சொற்கள் என மாணவநிலை அகராதிகள் உள்ளன. சிறுவர்களுக்கும் மாணவர்களுக்குமான இந்த அகராதிகள் ஆண்டுதோறும் கல்வியாண்டு தொடங்கப்பட சில மாதங்களுக்கு முன்பாகவே சந்தைப்படுத்தலுக்கு விடப்படுகின்றன. (பின்னிணைப்பு அட்டவணை பார்க்க சிறுவர்கள் அகராதிகள்).

பள்ளிமாணவர்களுக்கென **Mon grand Dictionnaire illustre** எனும் ஓர் அகராதி பள்ளி ஆசிரியர் குழாம் ஒன்றினால் 2002 ஆம் ஆண்டில் வெளியாகியிருக்கின்றது. இந்த, பள்ளி மாணவர் அகராதியில் 11.000 சொற்கள் வண்ணப்படவிளக்கங்களுடன் அமைந்திருக்கின்றது. மேலும், வரலாறு, புவியியல், உனக்குத் தெரியுமா? என்ற பொதுஅறிவுக்குறிப்புகளுடன், இலக்கணம், வினைத்திரிபு அட்டவணைகள் மற்றும் பெருக்கல் வாய்பாடுகளும் கொண்ட அகராதி 254 பக்கங்களுடன் தொகுக்கப்பட்டிருக்கின்றது.

குழந்தைகள், சிறுவர்கள், இளம்மாணவர்களுக்கென வயதுக்கும் படிக்கும் வகுப்புக்கும் ஏற்ப அகராதிகளை அச்சு வடிவம் கொடுத்து வெளியிடுவதைப் பிரெஞ்சிய அகராதியியல் பதிப்பகங்களான Larousse, Robert, Hachette ஆகியன பல்லாண்டுகளுக்கு மேலாக அகராதிப் பணி செய்துவருகின்றன. இவற்றைத் தவிர, 2009 – 2010 கல்வியாண்டு காலத்தில் தேசிய கல்விஅமைச்சின் பாதுகாப்பில், அகாட்தெமி பிரான்ஸேய்ஸ் அனுசரணையுடன் வேர்சாய், கிறெத்எய் கல்விப்பிராந்தியங்களும் **Dictionnaire national** –தேசிய அகராதி எனும் பெயரில் ஐந்து வயதிலிருந்து பதினொரு வயதுடைய 5.000 மாணவர்களை, ஆசிரியர்கள் துணையுடன் சிறிய அகராதிகளைச் செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்வாறு சிறுவர்கள் கூட்டுச்சேர்ந்து வேலைசெய்து மென்தட்டுவடிவத்திலும், வலைத்தளம் வழியிலும் பார்ப்பதற்கு அகராதிகள் தொகுக்கப்பட்டன. வலைத்தள அகராதியில் 30.000 சொற்களும், மென்தட்டு வடிவில் 17.000 சொற்களும் தொகுக்கப்பட்ட அகராதிகள் என இரண்டு அகராதிகள் தொகுக்கப்பட்டன. இவ்வாறு **Dictionnaire des écoliers de France** என அழைக்கப்பட்டன. இந்த அகராதிகளில் முதலாவது அகராதி 5 இலிருந்து 8 வயதுடைய மாணவர்களுக்கு GS/CP/CE வகுப்புகளுக்குரியது எனவும், வயது 8 இலிருந்து 11 வயதுடையமாணவர்களுக்கு–CE2/CM2 வகுப்புகளுக்கு உரியது. இந்த அகராதிகள் மென்தட்டு வடிவலும், வலைத்தள வடிவிலும் பார்வைக்கு உள்ளன. நூல் வடிவலும் வெளியாகி உள்ளன. பள்ளிமாணவர்களால் தொகுக்கப்பட்ட இரு அகராதிகள் வெளிவந்த நிகழ்வு அகராதியியலில் ஓர் திருப்பத்தை ஏற்படுத்தியிருக்கிறது.




சிறுவர் அகராதி – 5 – 8 வயது வயது




சிறுவர் அகராதி - 8 – 11

பிரெஞ்சு மொழிக்குப் பல அகராதிகள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இவ்வகராதிகளைப் பல அகராதிப்பதிப்பகங்கள் வெளியிட்டு வருகின்றன. இக்காலத்தில் பிரெஞ்சுக்கான அகராதிகள் எனும் போது, முறையே, Larousse – லறுய்ஸ், Robert – றொபேர், Hachette–அசெத் பதிப்பக அகராதிகளே நினைவுக்கு வரும். அகாட்தெமி அகராதி அதிகாரபூர்வ அகராதியாக இருந்தாலும், அதைப் பற்றிய செய்திகளும், எளிதில் கிடைக்கக்கூடிய தன்மையும் நடைமுறையில் குறைவாக இருப்பதால், அது பற்றிய எண்ணம் குறைவாகவே இருக்கிறது. மொழியில மிகுந்த பற்று, அகராதியியல் துறையில் ஈடுபாடு உள்ளவர்களுக்கே இந்த நல்ல பிரெஞ்சுக்கான அகராதி பற்றி விளங்கும்.

மக்கள் நன்கறிந்த இவ்வகராதிகள் Larousse, Robert, Hachette ஒவ்வொன்றும் ஒவ்வோர் – விதத்தில் தனிப்பெயர் எடுத்து பிரபல்யமாகி இருக்கின்றன. நம்பிக்கையான அகராதி என்றால்... Larousse உம், புதுமையான அகராதி என்றால்... Robert உம், தரமான அகராதி என்றால்... Hachette உம் பெயர் எடுத்திருக்கின்றன. இவை விலைகளிலும் வேறுபட்டனவாகவும் உள்ளன. Larousse நியாயமான விலை, Hachette தரமான விலை, Robert கூடிய விலை கொண்டவை என்ற நிலையும் உண்டு.

பிரான்சில் மரங்களில் இலை உதிரும் காலப்பகுதியில்தான்அகராதிகள் மலரும். இந்நாட்டில் கல்வி ஆண்டு செப்டம்பரில்தான் தொடங்கும். கல்விகற்கும் மாணவர்கள் படிப்புக்குத் தேவையான புத்தகங்கள் வாங்கும் போது கூடவே உரிய அகராதிகளையும் வாங்குவது வழக்கம். பிரெஞ்சு இலக்கணநூல்களில், அகராதி பற்றிய பாடம் அல்லது. பாடங்கள் வகுப்புத்தரத்தைப் பொறுத்து அமையும். இதனாலேயே புதிய அகராதிகள், புதுமுறை அகராதிகள் நவீன முறையில் வெளிவருகின்றன. அகராதியியல் பதிப்பகங்களும் போட்டிபோட்டுக்கொண்டு அகராதிகளைச் சந்தைப்படுத்துகின்றன. இவ்வாறு வெளியாகும் அகராதிகளில் சிறுவர்கள், இளையோர், பெரியவர்கள்எனப் பல்வேறுபட்ட பயனாளருக்கேற்ப ஆசிரியர், பேராசிரியர்கள், மொழியியலாளர்கள் எனப் பலதரப்பட்ட பட்டறிவாளர்கள் ஆலோசனையுடன் தயாரிக்கப்படுகின்றன. ஒருமொழி, இருமொழி மற்றும் பன்மொழி அகராதிகளாகவும் தொகுக்கப்படுகின்றன. பையகராதி, மேசையகராதி, பேரகராதி, கலைக்களஞ்சியகராதி தேவைகளுக்கு அமைய, எனப் பலஅளவுகளில் உருவாக்கப்படுகின்றன. பொதுவாக ஒரு குறிப்பிட்ட. ஆண்டுக்கான அகராதிகள் நடப்புஆண்டின் ஜுன் – செப்டம்பர் காலப்பகுதியில் நூல்நிலையங்கள், புத்தகசாலைகள், புத்தக நிலையங்கள் சிறப்பங்காடிகள் மற்றும் பெருங்கடைகளுக்கு வருகின்றன.



# MACRO STRUCTURE OF AMARAKOŚA AND TIVĀKARAM : A COMPARISON

**Dr. V. JAYADEVAN**
**(Retd.) H.O.D.**
**Department of Tamil Language,**
**Chief Editor, Tamil Lexicon Revision Project,**
**University of Madras.**



Amarakośa, named after its author Amarasimha, is the most celebrated and au- Athoritative ancient thesaurus of Sanskrit, it is also called as Namalingasása na, meaning literally 'instructions for deciding the genders ofnouns'. It is also known as Trikändaand paryāyakośa as it contains three kandas and as it is a met- rical dictionary of synonyms. Though its date is disputed, most of the scholars hold the view that it belongs to the 7th century CE.

Tiväkaram, named after its author Tiväkarar, is the earliest of all metrical lexicons (otherwise popularly known as nikantus) now extant in Tamil. It is also called as CentanTiväkaram since it was composed under the patronage of Cen- tan, a chieftain of Ambar. Though its date is disputed, most of the scholars hold the view that it belongs to the 8th century CE.

This paper attempts to make a comparison between these two nikantus in terms of their macro structure or textual organization.

### Amarakośa

It is written in Anuştup meter which helps easy memorization. It has 1607.1/2 slokas in total. It contains total 11580 content words (words that are usedto show the synonymous word or to define the synonymous words) and 9031 unique words (the total content words after removing the repetitions). It has 3 kändas (chapters) as follows:

1 Prathamakända

2 Dvitiyakanda and

3 Tṛtiyakanda.

The first kända has words pertaining to gods, heaven, pañcamahābhūta (five basic elements) and abstract concepts such as dik (direction), kāla (time), vāk, etc. This chapter has ten vargas (sections) as follows:

1 Svargavargah (heaven): Heaven, Gods, Demons, their arms, ornaments, symbols or vehicles, and other attributes, Fire, Air, Velocity, Eternity, etc.

2 Vyomavargah (sky)

3 Digvargah(directions): Directions, Deities of the directions, elephants at the points, theirfemale elephants, Cloud, thunder, lightning, rainbow, Rain, hail, rainyday, cloudy day, Moon, types of light, frost, Stars, Planets, sun- set,dawn, sunlight, etc.

4 Kälavargaḥ (time): Time, day, night, variations of the moon, eclipse, sec- ond, hour, months,year, Weather, seasons, Happy, Sorrow, Soul, Mind, etc.)

5 Dhivargaḥ(cognition): Individuality, consciousness, knowledge, sense, organs, tastes, fragrance, colours, etc.)

6 Sabdadivargah (Sounds): Sarasvati, voice, word, Vedas, Vedängas, stories, legends, sound, types of sounds, speech, musical sounds, song, ornament's sound, etc.

7 Natyavargah (drama): Seven musical tones, Musical Instruments, dance, theatrical charac- ters,sentiments, desire, affection, kindness, Festival etc.

8 Pätälabhogivargah (nether world): Infernal region, hole, darkness, Snakes, kinds of serpent, parts of snake, etc.

9 Narakavargah (hell): Hell, various hells, departed souls, pain, etc.

10 Värivargah (water): Water, Ocean, wave, whirlpool, shore, channel, i sland, boat, voyage,

pilot, deep, fish, fisherman, net, fish basket, hook, etc., types of fishes, Aquatic animals, crab, turtle, etc. Well, pond, types of ponds, River, Names of rivers, water plants, lotus, water lilly, etc. Parts of these plants etc.

The secondkända deals with the words denoting real physical objects such as earth,human beings, animals, plants etc. This chapter also has ten "vargas" as follows:

1 Bhumivargah (earth): Earth, land, soil, clay, world, India, regions, types of lands, country, village, kingdom, hill, road,etc.

2 Puravargah (towns or Cities): City, suburb, Market, fort, wall, house, kinds of houses, parts of house, house holdings, building land, etc.

3 Sailavargah (mountains): Mountains, kinds of mountains, parts of mountains, caves, etc.

4 Vanausadhivargah (forests and medicines): Forest, garden, tree, parts of tree, flowers, fruits, leaf, 4 shrub, creeper, names of trees, names of shrubs, names of creepers, names of grass, etc.

5 Simhadivargaḥ(lions and other animals): Animals, lion, tiger, wolf, deer, kinds of deer, etc. Insects, bee, cricket, birds, hawk, skylark, crow, parrot, etc. parts of birds, wing, beak, etc.

6 Manuşyavargah (mankind): Man, woman, descriptions of woman, blood-relations like son,daugh- ter, husband, wife etc., manhood, different stages of manhood,parts of our body, diseases such as cough, scab, etc., dress, ornaments, cloths, types of cloths, cosmetics, fragrant plants, sandal etc., hairdecoration styles, daily usable things etc.

7 Brahmavargah (priest tribe): Tribes, religious states, sacerdotal, scholars, characters and descrip- tionsof priests, their occupations and observances, types of fires, sacrifice, itsrequisites, alms, worship, austerity, study, hypocrisy, marriage, human, pursuits and objects etc.

8 Ksatriyavargah (military tribe): Military tribe, kings, ministers, officers, servants, enemies, al- lies,requisites of government, means of defense, and of success, revenue, foresight, insignia of royalty, army, elephants, parts and kind ofelephants, horses, types of horses, vehicles, chariots, litters, warriors,arms and weapons,

bow, arrow, javelin etc. war, slaughter, funeral,prison, life, etc.

9 Vaiśyavargah (business tribe): Third tribe, professions, husbandman, field, implements of hus- bandry,corn, pulse, oil-seeds, granary, kitchen, vessels, prepared food, dairy,cattle, traffic, weights and measures, commodities, etc.

10 Sūdravargah (mixed classes): Fourth tribe, mixed classes, artisans, jugglers, dancers, musician, hunters, servants, barbarians, dogs, hogs, theft, nets, fops, loom, plot for burden, wrought leath- er, tools, art, images, wages, spirituous gaming, etc.

The third kända has words related to grammar, description of polysemous wordsand other miscel- laneous words. This chapter has five "vargas" as follows:

1 Viseşyanighnavargaḥ (adjective): Epithets of persons, Qualities of things, etc. 2

2 Samkirnavargah (miscellaneous)

3 Nänärthavargah (polysemous): Homonymous and polysemous words

4 Avyayavargah (indeclinables)

5 Lingadisangrahavargah (gender): Genders, Masculine, Feminine, Neuter, Masculine and Femi- nine, Masculine and Neuter, Feminine and Neuter, Three genders, variationsof gender.

## Tiväkaram

It is written in Sutra style facilitating easy memorization. It has a total of 2180 sutras dealing with about 9500 words. It has 12 sections as follows:

1 Teyvap-peyar-t-tokuti (Section on the Names of Deities)

(Names of major and minor deities of different religious beliefs, Vidyadharas, Gandharvas, Bhu- ta-gana, Devil, Sky, Wind, Cold wind, Northern wind, Western wind, Eastern wind, Breeze, Whirl- wind, Fire, Submarine fire, Lamp, Spark of fire, A body of fire, Fire of burning ground, Firebrand, Fire-drill, God of fire, Water, Brhaspati, Venus, Saturn, week, Rāhu, Kētu, Ādi-seshan, 12 zodiac signs, 27 stars, Arundhati star, Star of the sky, A moment of time, Nädikā (duration of 24 min- utes), Time divisions, San-dhya, Duration of three hours, Daytime,Sunlight, Night, Darkness, Day, Divisions of the day, Six seasons, Winter, Autumn, Early dew season, Ṛtu, Time, End of the world, Kalpa, Lifetime, Rain, Cloud, Thunderbolt, Heavy rain,Continuous rain, Cessation of rain, Rain- drop, Hail, Drizzle, Lightning, Thunder, Halo, Rainbow, Bow of Kama).

2 Makkatpeyar-t-tokuti(Section on the Names of humans) (Ascetics, Saivites, Vaishnavites, Jains, Buddhists, Jain ascetics, Asceticswith matted hair, Brah- mins, Teachers, Learned men, Intellectuals, Poets, Elders, Kings, Chieftains, Ministers, Men of different walks, professions and occupations, Barbarians, Foreigners, especially Greek, Arab or Moor, Persons of different tracts of land, Physical parts of the humans, etc.)

3 Vilankinpeyar-t-tokuti (Section on the Names of Fauna)

(Names of Wild animals, Domestic animals, Farm animals, Birds, Flies, Aquatic animals, Reptiles, Physical parts of animals, etc.)

4 Marap-peyar-t-tokuti(Section on the Names of Flora)

(Names of different kinds of trees, creepers, shrubs and herbs, their flowers, their various states, Garlands of flowers, etc.)

5 Itap-peyar-t-tokuti(Section on Topographic terms)

(Names of Heaven, Celestial world, Directions, Earth, Hell, World, Country, different Hills, Rocks, Seas, Rivers, Water, Mire, Sand, Dust, the five tracts of land, Villages, Towns, Streets, Temples, Shops, Houses, their parts, etc.)

6 Palporutpeyar-t-tokuti (Section on the Names of Objects)

(Names of Gold and other Metals, nine Gems, their characteristics, four kinds of fragrant paste, Milk and its products, Honey, Liquor, Ambrosia, Poison, etc.)

7 Ceyarkai-p-peyar-t-tokuti (Section on the Names of Artificial Objects) (Names of Trident, Battle-axe, Discus-weapon, Bow, Arrow, Spear, Sword, Ornaments worn on various parts of human body, Utensils, Musical instruments, Furniture, Vessels, Clothes, Cot, Mattress, Pillow, Flag, etc.)

8 Panpu-p-peyar-t-tokuti(Section on the Names of Qualities)

(Names of Circular shape, Bending, Aggregation, Heap, Globular shape, Hollow space in pipes, tubes, etc., Hole, Bigness, Smallness, littleness, Abundance, Distance, Breadth, Area, Length, Diminishing, Expanding, Hardness, Softness, Elevation, Depth, Colours, Brightness, Strength, Love, Emotions, Fragrance, etc.)

9 Ceyalparriyapeyar-t-tokuti(Section on the Names of Actions)

(Doing, Games of the females, Creating, Appreciating, Playing, Marriage, Festivity, Adorning, Wearing, Inserting, Eating, Sleeping, Stealing, Climbing, Breaking, Hating, Desisting, Pleading, Weaping, Going, Rushing, etc.)

10 Oliparriyapeyar-t-tokuti(Section on the terms relating to Sounds)

(Onomatopoeic expressions, Imitative syllabic sounds, etc. have been chiefly dealt with in this section)

11 Orucolpalaporutpeyar-t-tokuti(Section on the Words with multiple meanings)

(Multiple meanings for about 382 words from emam tovākai have been provided)

Palporutkuttattuorupeyar-t-tokuti (Section on Collective Terms)

(Terms associating with the numerals 1 to 12, 18, 25, 28 and 32, Names for the inter-caste people, Divisions of Army consisting of chariots, elephants, horses and infantry; 1, 2, 100, 1000, 10, 000, one lakh, ten lakh, one crore, ten crore, 100crore, 1000 crore, 10,000 crore, one lakh crore as the cosmic period of Brahma, etc.)

Of these twelve sections, the first nine deal with synonyms (classified semantically), the tenth deals chiefly with terms relating to sounds and the eleventh deals with polysemous words without making distinction with homonyms. The words under these two sections are arranged morphemically and se- mantically. The twelfth section deals with collective terms or group names or associatives (classified numeratively). It is to be noted that Tiväkaram like other later nikantusin Tamil presents verbal noun forms or gerunds instead of presenting root forms of verbs while explaining them.

Amarakośa and Tiväkaram: A Comparison

The following table may throw light on how

| āṇḍa:Vargaḥ | Title of Vargaḥ | Section | Title of Section |
|---|---|---|---|
| 1:1 | Svargavargaḥ (heaven) | 1 | Teyvap-peyar-t-tokuti (Deities) |
| 1:2 | Vyomavargaḥ (sky) | 1 | Teyvap-peyar-t-tokuti (Deities) |
| 1:3 | Digvargaḥ (directions) | 5 | Iṭap-peyar-t-tokuti (Topographic |
| 1:4 | Kālavargaḥ (time) | 1 | Teyvap-peyar-t-tokuti (Deities) |
| 1:5 | Dhīvargaḥ (cognition) | 6 | Palporuṭpeyar-t-tokuti (Objects) |
| 1:6 | Śabdādivargaḥ (Sounds) | 10 | Oliparriyapeyar-t-tokuti(Sounds |
| 1:7 | Nāṭyavargaḥ (drama) | - | - |
| 1:8 | Pātālabhogivargaḥ (nether world) | 5 | Iṭap-peyar-t-tokuti (Topographic |
| 1:9 | Narakavargaḥ (hell) | 5 | Iṭap-peyar-t-tokuti (Topographic |
| 1:10 | Vārivargaḥ (water) | 5 | Iṭap-peyar-t-tokuti (Topographic |
| 2:1 | Bhūmivargaḥ (earth) | 5 | Iṭap-peyar-t-tokuti (Topographic |
| 2:2 | Puravargaḥ (towns or Cities) | 5 | Iṭap-peyar-t-tokuti (Topographic |
| 2:3 | Śailavargaḥ (mountains) | 5 | Iṭap-peyar-t-tokuti (Topographic |
| 2:4 | Vanauṣadhivargaḥ (forests & medicines) | 4 | Marap-peyar-t-tokuti(Flora) |
| 2:5 | Siṃhādivargaḥ (lions &other animals) | 3 | Vilaṉkiṉpeyar-t-tokuti (Fauna) |
| 2:6 | Manuṣyavargaḥ (mankind) | 2 | Makkaṭpeyar-t-tokuti(Humans) |
| 2:7 | Brahmavargaḥ (priest tribe) | 2 | Makkaṭpeyar-t-tokuti(Humans) |
| 2:8 | Kṣatriyavargaḥ (military tribe) | 2 | Makkaṭpeyar-t-tokuti(Humans) |
| 2:9 | Vaiśyavargaḥ (business tribe) | 2 | Makkaṭpeyar-t-tokuti(Humans) |
| 2:10 | Śūdravargaḥ (mixed classes) | 2 | Makkaṭpeyar-t-tokuti(Humans) |
| 3:1 | Viśeṣyanighnavargaḥ (adjective) | - | - |
| 3:2 | Saṁkīrṇavargaḥ (miscellaneous) | - | - |
| 3:3 | Nānārthavargaḥ (polysemous) | 11 | Orucolpalaporuṭpeyar-t-tokuti (polysemes) |
| 3:4 | Avyayavargaḥ (indeclinables) | - | - |
| 3:5 | Liṅgādisaṅgrahavargaḥ (gender) | - | - |
| - | - | 7 | Ceyaṟkai-p-peyar-t-tokuti (Artificial Objects) |
| - | - | 8 | Paṇpu-p-peyar-t-tokuti(Qualities |
| - | - | 9 | Ceyalparriyapeyar-t-tokuti |

# சங்க இலக்கியத்தில் ஆரியர்

முனைவர் பி. பாலசுப்பிரமணியன்
உதவிப் பேராசிரியர் & துறைத்தலைவர் (சுயநிதிப்பிரிவு)
தமிழ் முதுகலை மற்றும் ஆய்வுத்துறை
தூய நெஞ்சக் கல்லூரி (தன்னாட்சி)
திருப்பத்தூர் – 635601, திருப்பத்தூர் மாவட்டம்.

மக்கள் வழக்கில் புழக்கத்தில் உள்ள சொற்கள் ஒரு காலகட்டத்தின் வரலாற்றைப் பேசுகின்றன. அவ்வச் சொற்களின் பயன்பாட்டைக் கலை, இலக்கியங்கள் வழி அறிகிறோம். இந்தச் சொற்கள் நிரந்தரமானவையுமல்ல. காலத்தின் பண்பாட்டுச் சூழலுக்கேற்பச் சொற்களின் பொருண்மைகளும் மாறிக்கொண்டேயிருக்கின்றன. அதனடிப்படையில் சங்க இலக்கியப் பாடல்களில் பதிவு செய்யப்பட்டிருக்கின்ற ஆரியர் என்ற சொல்லின் பொருளை ஆராய்கிறது இக்கட்டுரை.

### ஆரியர்

ஆரியர் என்ற சொல் மக்கள் கூட்டம் என்ற பொருண்மையில் கையாளப்பட்டிருக்கிறது. "ஆரியர் என்ற சொல் சமற்கிருத மற்றும் ஈரானிய மொழிகளின் அடிப்படையில் அமைந்து ஆர்ய் எனும் அடிச்சொல்லிலிருந்து மருவி வந்ததாகக் கருதப்படுகிறது. இச்சொல் முதன்முதலில் ரிக்வேத நூலில் காணப்படுகிறது. இந்நூலில் அடங்கியுள்ள செய்யுள்கள் இன்றைக்கு 3500 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டவை எனக் கருதப்படுகிறது. 'ஆர்ய' என்ற சொல் அய்ரிய என்ற இரானிய மொழிச் சொல்லுடன் உறவுடைய சொல்லாகும். இது சான்றோரையும் சான்றாண்மை என்ற பண்பையும் குறிக்கும் சொல்லாக ரிக் வேதத்தில் காணப்படுகிறது. ஆனால், இது தற்காலத்தில் மேன்மையான, புனிதமான போன்ற இன மேன்மையைக் குறிக்கும் ஒரு சொல்லாக மாற்றப்பட்டது. ஜெர்மனியில் இரண்டாம் உலகப்போரின் போது நாசிகளின் இனவாதத்தை அடுத்து இது ஒரு வெறுப்புக்குரிய சொல்லாகவும் மாறியது. நாசிகள் போரில் தோல்வியுற்றபோது ஆரியர் பற்றிய கருத்து ஐரோப்பாவில் கண்டனத்துக்கு இலக்காகிக் கைவிடப்படும் நிலை ஏற்பட்டது. எனினும் தெற்காசியாவில் குறிப்பாகப் பிரித்தானியர் ஆட்சி நீங்கியப் பின்னர் ஆரியர் பற்றிய கருத்து புத்துயிர் பெற்றது" என்கிறார் கா. இந்திரபாலா.

"வடநாட்டிலிருந்து பரத கண்டத்தில் வந்து ஸரஸ்வதி நதி தீரத்தில் வசித்தவர்கள் ஆரியர்" என்று ஆ. சிங்காரவேலு முதலியார் அபிதான சிந்தாமணியில் குறிப்பிடுகிறார்.

ஆரியர் என்ற சொல் அந்தணர்கள், பிராமணர்களைக் குறிக்கிறதா? என்ற கேள்வியோடு விவாதிக்கிறபோது, பண்பாட்டு ஆய்வாளர் தொ. பரமசிவன் தமது கட்டுரையில் சில செய்திகளை அளிக்கிறார்.

"சங்க இலக்கியங்கள் பிராமணர்களைக் குறிப்பதற்கு அந்தணர், பார்ப்பார் என்ற இரண்டு சொற்களைப் பயன்படுத்துகின்றன. பிராமணர்களைக் குறிக்க இக்காலத்தில் வழங்கும் ஐயர் (அல்லது ஐயங்கார்) என்ற சொல் சங்க இலக்கியங்களில் அவர்களைக் குறிக்க எங்குமே பயன்படுத்தப்படவில்லை என்கிறார் தொ. பரமசிவன். இங்கு ஆரியர் என்ற சொல் பற்றி தொ. பரமசிவன் பதிவு செய்யவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆக, அந்தணர், பார்ப்பனர், ஐயர் என்ற சொற்களுக்கும் ஆரியர் என்ற சொல்லுக்கும் தொடர்பு இருக்கிறதா? என்பது குறித்து ஆராய வேண்டியிருக்கிறது.

## ஆரியர் – சங்க இலக்கியம்

ஆரியர் என்ற சொல் சங்க இலக்கியங்களில் ஏழு பாடல்களில் இடம்பெற்றுள்ளது. நற்றிணையில் 170 ஆம் பாடல் ஒன்றும், குறுந்தொகையில் 7 ஆம் பாடல் ஒன்றும், பதிற்றுப்பத்தில் 11 ஆம் பாடல் ஒன்றும், அகநானூற்றில் 276, 336, 396, 398 ஆகிய நான்கு பாடல்களுமாக ஏழு பாடல்களில் ஆரியர் என்ற சொல் பயின்று வந்துள்ளதை அறிகிறோம்.

ஆரியர் என்ற சொல் மட்டுமல்லாது ஆரியர் என்ற சொல்லுடன் தொடர்புடைய பிற சொற்களையும் சங்கப்பாடல்கள்வழித் தெரிந்து கொள்ள முடிகிறது. ஆரியப் பொருநன் பாணனுடன் மற்போரிட்டான் என்ற செய்தியை அகநானூறு 386 ஆம் பாடல் தெரிவிக்கிறது.

பதிற்றுப்பத்திலுள்ள ஐந்தாம் பதிகம் ஆரிய அண்ணல் என்று அழைக்கப்படுகின்ற இமயமலை மன்னர்களாகிய கனக விசயர்களின் பெயர்களைப் பதிவு செய்கிறது.

ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழை அறிவித்தற்காகக் கபிலர் குறிஞ்சிப்பாட்டு நூலினைப் பாடினார் என்ற செய்தியையும் அறிகிறோம். வடநாட்டு ஆரிய மன்னர்களைப் போரில் வெற்றி கொண்டதன் காரணமாக ஆரியப்படை கடந்த பாண்டிய நெடுஞ்செழியன் என்னும் பெயரையும் அறிகிறோம். இச்செய்திகளின் அடிப்படையில் ஒருவாறு ஆரியர் யார்? என்ற புரிதலுடன் சங்கப்பாடல்களின் பொருண்மைகளை ஆராய்வோம்.

### நற்றிணை

நற்றிணையில் தோழி விறலிக்கு வாயின்மறுத்தல் துறையிலான மருதம் நிலம் சார்ந்த 170 ஆம் பாடலில் ஆரியர் என்ற சொல் இடம்பெற்றுள்ளது. இந்தப் பாடலை இயற்றிய ஆசிரியர் பெயர் குறிப்பிடப்படவில்லை.

"ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடி யாங்குநம்
பன்மையது எவனோ இவள் நன்மைதலைப்
படினே"

என்ற பாடலடிகளுக்கு, "ஆரியர் நெருங்கிச் செய்த போரின்கண்ணே பெரிய புகழையுடைய முள்ளூர்ப் போர்க்களத்துப் பலருடன் சென்று உறையினின்று உருவிய ஒள்ளிய வாட்படையையுடைய மலையனது ஒப்பற்ற வேற்படையை அஞ்சி அவ்ஆரியப்படை ஓடியது போலப் பலர்கூடிய நம்முடைய கூட்டமும் ஒழிய வேண்டியதன்றி வேறுயாது பயன்கண்டீர்" என்று பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை விளக்கம் தருகிறார்.

முள்ளூர் என்னும் இடத்தைக் களமாகக் கொண்டு ஆரியர் வாட்படையுடன் தாக்க, மலையன் வில்லெய்து அவர்களை எதிர்கொண்டு தாக்கியிருக்கின்றான். ஆரியர் பலர் கூட்டமாக நின்று போரிட்டாலும் மலையனது வில்லுக்குத் தாக்குப்பிடிக்க முடியாமல் ஓடியிருக்கின்றனர் என்ற செய்தியை மேற்கண்ட பாடலிலிருந்து அறிய முடிகிறது. இந்தச் செய்தியுடன் விறலியிடமிருந்து விடுபட்டு, தோழியர் கூட்டத்துடன் விலகிச் செல்வதைப் பொருத்திக் காட்டுகிறார் புலவர்.

### குறுந்தொகை

தலைவனும் தலைவியும் பாலை நிலம் வழியாக உடன்போக்குச் செல்வதைக் கண்டோர் இரங்கிப் பாடியதாக ஏழாம் பாடல் அமைந்துள்ளது. கண்டோர் கூற்றான இப்பாடலைப் பாடியவர் பெரும்பதுமனார் ஆவார்.

"யார்கொல் அளியர் தாமே ஆரியர்
கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்
வேய்பயில் அழுவம் முன்னியோரே"

என்ற பாடலடிகளுக்கு, "ஆரியக் கூத்தர்கள் கயிற்றில் ஆடுங்கால் முழங்கும் பறையின் ஓசை போல மேல்காற்று மோதுதலானே நிலை கலங்கி வாகையினது வெள்ளிய நெற்றுக்கள் ஒலித்தற்கு இடமாகிய மூங்கில்கள் அடர்ந்த பாலை நிலத்தின் கண்ணே செல்லக் கருதிச் செல்லா நிற்போர்" என்று பொ.வே. சோமசுந்தரனார் உரை எழுதுகிறார்.

பறை முழக்கத்தின் பின்னணி இசையில் கயிற்றின் மீதேறி கழைக்கூத்தாடி, வித்தை காட்டிப் பிழைப்பு நடத்தியவர்கள் ஆரியர்கள் என்ற செய்தியை அறிய முடிகிறது.

## பதிற்றுப்பத்து

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு குமட்டூர்க் கண்ணனார் பாடிய இரண்டாம்பத்தில் உள்ள 11 ஆம் பாடல் நெடுஞ்சேரலாதனின் வெற்றியையும் செல்வச் சிறப்பையும் பதிவு செய்திருக்கிறது.

"கவிர்ததை சிலம்பில் துஞ்சும் கவரி

பரந்து இலங்கு அருவியொடு நரந்தம்

கனவும்

ஆரியர் துவன்றிய பேர் இசை இமயம்

தென்அம் குமரியொடு ஆயிடை

மன்மீக் கூறுநர் மறம் தபக் கடந்தே"

என்ற இப்பாடலில் ஆரியர் என்ற சொல் இடம் பெற்றுள்ளது.

"முள்முருக்க மரங்கள் அடர்ந்து வளர்ந்துள்ள இமயமலையின் பக்கமலையில் கவரிமான்கள் தூங்குகின்றன. அவ்வாறு தூங்கும்போது அவை பகற்பொழுதில் தாம் நீரருந்திய அருவியையும் உண்ட நரந்தம் புல்லையுமே கனவில் காணும் வாழ்க்கை உடையன. அவ்வாறு அமைதி நிறைந்ததும் முனிவர்கள் நிறைந்து விளங்கும் பெரும்புகழுடையதுமான இமயமலைக்கும் தென்திசையில் விளங்கும் அழகிய குமரிக்கும் இடைப்பட்ட நிலத்தே ஆளும் மன்னர்களுள் செருக்கால் தம்மை உயர்த்திக் கூறிக் கொள்பவர்களுடைய வீரம் அழியுமாறு அவர்களோடு எதிர்நின்று பொருது வென்றாய்" என்று உரை எழுதிச் செல்கிறார் அ. ஆலிஸ். இவர் ஆரியர் என்பதற்கு முனிவர்கள் என்று பொருள் தருவது விவாதத்திற்குரியது.

மேற்கண்ட பாடலுக்கு, "ஆரியர் நிறைந்து வாழும் பெரிய புகழையுடைய இமயம் தெற்கின் கண்ணுள்ள குமரியாகிய இவற்றிற்கு இடைப்பட்ட நாட்டிலுள்ள மன்னர்களுள் செருக்குற்று மீக்கூறும் மன்னர்களின் மறம் கெட்டழியுமாறு வஞ்சி யாது பொருது வென்றான்" என்று ஔவை சு. துரைசாமிப்பிள்ளை குறிப்பிடுகிறார்.

ஆரியர் என்பவர்கள் முனிவர்கள் என்ற பொருளில் துரைசாமிப்பிள்ளை கூறவில்லை. சேரமன்னன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இமயம்வரை சென்று வெற்றிபெற்றான் என்ற செய்தியைப் பதிற்றுப்பத்தின் 11ஆம் பாடல்வழி அறிகிறோம்.

## அகநானூறு

பரணர் பாடிய 276 ஆம் மருதநிலப்பாடல் பரத்தையர் கூற்றாக அமைந்துள்ளது.

"தாரும் தானையும் பற்றி ஆரியர்

பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு

போலத்"

என்ற பாடலடிகளில் ஆரியர் என்ற சொல் இடம்பெற்றுள்ளது. "ஆரியர் பழக்கி வைத்துள்ள பெண்யானை தான் பழகிக் கொணர்ந்து தரும் ஆண் யானை போல" என்று விளக்கம் தருகிறார் ந.மு. வேங்கடசாமி நாட்டார்.

பெண்யானைகளைப் பழக்கப்படுத்தி ஆண்யானைகளைப் பிடிக்கும் செயல்களைச் செய்தவர்களாக ஆரியர் இருந்திருக்கின்றனர்.

பாலைக்கொட்டிலார் 336ஆம் மருதநிலப்பாடல் பரத்தையர் கூற்றாக அமைந்துள்ளது.

"மாரி யம்பின் மழைத்தோற் சோழர்

வில்லீண்டு குறும்பின் வல்லத்துப்

புறமிளை

ஆரியர் படையின் உடைகவென்

நேரிறை முன்கை வீங்கிய வளையே"

என்ற பாடலில் ஆரியர் என்ற சொல் பயின்று வந்துள்ளது.

"வல்லத்துப் புறத்தேயுள்ள காவற் காட்டின்கண் வந்தடைந்த ஆரியரது படைபோல எனது நேரிய சந்தினையுடைய முன்கையில் திரண்ட வளைகள் சிதைந்தொழிவனவாக" என்று ந.மு. வேங்கடசாமி நாட்டார் உரை யெழுதியிருக்கிறார்.

வல்லம் என்ற ஊருக்குப் புறத்தில் உள்ள காவற்காட்டில் சோழருக்கும் ஆரியருக்குமிடையே போர் மூண்டது. இதில் ஆரியப்படை உடைந்து ஓடி விட்டதைப் போல என் வளையல்கள் உடைந்து போகட்டும் என்கிறாள் பரத்தை. சோழர்களின் போர்த்திறத்திற்கு ஈடுகொடுக்க முடியாமல் ஆரியர்கள் உடைந்து ஓடிவிட்டதை

இப்பாடல் பதிவு செய்கிறது.

பரணரின் மருதத்திணையிலமைந்த 396 ஆம் பாடல் காதற்பரத்தைத் தலைமகனுக்குச் சொல்லுவதாக அமைந்துள்ளது.

"ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்

தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து

வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்

வஞ்சி அன்னவென் நலந்தந்து சென்மே"

என்ற பாடலடிகளுக்கு, "ஆரிய மன்னர்கள் அலறுமாறு அவர்களைத் தாக்கிப் பெரிய புகழையுடைய பழையதாகிய முதிர்ந்த இமயமலையின் மீது வளைந்த விற்பொறியைப் பதித்து கொடிய சினம் பொருந்திய பகை வேந்தரைப் பிணித்து வந்தோனாகிய சேரனது வஞ்சி நகரையொத்த என் அழகினைத் தந்து செல்வாயாக" என்று உரை வகுக்கிறார் ந.மு. வேங்கடசாமி நாட்டார்.

நீ பிரிந்து சென்றால், சினங்கொண்டு ஆரியர்களைத் தாக்கி இமயத்தில் வளைந்த வில் சின்னத்தைப் பொறித்த சேரனின் தலைநகரமான வஞ்சி போன்ற என் அழகினைத் தந்து விட்டுச் செல் என்று பரத்தைத் தலைவனைப் பார்த்துக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

மேற்கண்ட பாடற்செய்தியின்படி, சேரன் இமயமலையில் வில்லம்பு சின்னத்தைப் பொறித்தான் என்பதில், எந்தச் சேர மன்னன் என்ற செய்தி இடம்பெறவில்லை. தனித்துச் சேரமன்னர்களின் பெயர் குறிப்பிடாமல் பொதுவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளமையை அறிகிறோம்.

இம்மென்கீரனாரின் 398 ஆம் குறிஞ்சிநிலப் பாடல் தலைவனின் மலையிலிருந்து ஓடிவரும் ஆற்றோடு காதல் உணர்வுகளைத் தலைவி கூறுவதாக அமைந்துள்ளது.

"மாரி புறந்தர நந்தி ஆரியர்

நெடுவரை புரையும் எந்தை

கானத் தல்கி இன்றிவண்"

என்ற பாடலடிகளுக்கு, "ஆரியரது பொன் பொருந்திய நீண்ட இமயமலையை யொக்கும் எம் தந்தையது பலபூக்களுடைய காட்டில் அமர்ந்து இற்றைப் பொழுது இவ்விடத்தே சேர்ந்திருந்து செல்லின் நின் காரியம் ஏதேனும் கெடுவது உண்டோ" என்று உரை எழுதுகிறார் ந.மு. வேங்கடசாமி நாட்டார்.

தமது தந்தையின் கானகத்தை ஆரியர் வாழும் இமயமலையின் வளத்துடன் ஒப்பிட்டுப் பேசுகிறாள் தலைவி. பொன்படு நெடுவரையாகிய இயமத்தில் ஆரியர்கள் வாழ்ந்து வந்தனர் என்ற செய்தியைப் பாடல் வழி அறியமுடிகிறது.

## மதிப்பீடு

- ஆரியர் என்ற சொல் சங்க இலக்கியத்தில் ஏழு பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

- ஆரியர்கள் கழைக்கூத்தாடிகளாகவும் பெண் யானைகளைப் பழக்கியவர்களாகவும் இருந்திருக்கின்றனர். ஒருவேளை இவர்கள் வடபுலத்திலிருந்து தென்னகத்திற்கு வந்தபிறகு இந்த வேலைகளைச் செய்திருக்கலாம் எனக்கருத இடமிருக்கிறது.

- ஆரியர்கள் இமயமலையில் வாழ்ந்த முனிவர்கள் என்று உரையாசிரியர் ஆலிஸ் குறிப்பிடுவது விவாதத்திற்குரியது.

- சேரமன்னர்களும் சோழர்களும் இமயம் வரை சென்று ஆரியரை வீழ்த்தி வெற்றிக்கொடி நாட்டிய செய்தியைச் சங்கப்பாடல்கள் விவரிக்கின்றன.

- பெரும்பாலான பாடல்கள் ஆரியர்களை வெற்றி கொண்டவர்கள் சேரர்கள் என்ற செய்தியைப் புலப்படுத்துகிறது.

- முள்ளூர் எனுமிடத்தில் மலையன் ஆரியருடன் போரிட்டுத் தமது வில் திறத்தால் விரட்டியடித்தான் என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. இங்கு மலையன் யார் என்பதற்குத் தெளிவான விளக்கம் இல்லை. உரையாசிரியர்களும் தெளிவாகப் பதிலளிக்கவில்லை எனலாம்.

- சேர, சோழ, பாண்டியர் (ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்) மூவருமே ஆரியரை வெற்றி கொண்டனர் என்பதைச் சங்கப் பாடல்கள் வழி அறிகிறோம்.

- மூவேந்தர்களின் வெற்றியை அடையாளப்படுத்த ஆரியர் தோல்வியைப் புனைவாக்கம் செய்து பாடியிருப்பார்களா? என்ற கேள்வியும் நமக்குள் இருக்கிறது.

• ஆரியர் என்ற சொல் சங்க இலக்கியத்திற்குப் பிறகு உருவான இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளதா? என்ற தேடல் மிக அவசியமாகிறது.

• திராவிடம் x ஆரியம் என்ற கருத்தியல் முரண் எப்போது உருவானது என்பதையும் சங்க இலக்கியப் பாடல்களோடு இணைத்து ஆராய வேண்டியிருக்கிறது.

• இமயமலையில் மக்கள் வாழ்ந்திருப்பார்களா? அரசன் ஆட்சி செய்திருப்பானா? இல்லை ஆரியர்கள் வாழ்ந்ததாகப் புனையப்பட்டுள்ளதா? என்ற கருத்தியலையும் திறனாய வேண்டியிருக்கிறது.

• ஆரியர் என்ற சொல்லுக்குப் பிராமணர், அந்தணர், பார்ப்பனர், ஐயர் என்ற பொருண்மையில் உரையாசிரியர்கள் பொருள் கற்பிக்கவில்லை. ஒரு வேளை இந்தச் சொற்கள் எல்லாம் பிற்காலத்தில் எழுந்தவைகளாக இருக்கலாம்.

• ஆரியர் என்ற சொல் இடம் பெற்றிருக்கும் பாடல்கள் இடைச்செருகலா? பிற்காலத்தவையா? எனப் பல ஆய்வுகளுக்கான கருதுகோளை ஆரியர் என்ற சொல் நமக்குள் விதைத்துச் செல்கிறது.

## துணை நூல்கள்


1. மாதையன், பெ., 2007 சங்க இலக்கியச் சொல்லடைவு, முதற்பதிப்பு, பதிப்புத்துறை, தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர் – 613010.

2. சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.), 1974, அகநானூறு (மணிமிடைப் பவளம், நித்திலக்கோவை), முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.

3. பாலசுப்பிரமணியன், கு.வெ. (உ.ஆ.), 2004, நற்றிணை மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியு செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை – 98.

4. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், (உ.ஆ.), 2007, குறுந்தொகை, முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.

5. வேங்கடசாமி நாட்டார், ந.மு., வேங்கடாசலம் பிள்ளை, ரா., (உ.ஆ.), 1961, அகநானூறு, முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.

6. சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.), 2007, குறுந்தொகை, முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.

7. ஆலிஸ், அ. (உ.ஆ.), 2004, பதிற்றுப்பத்து மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியு செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை – 98.

8. துரைசாமிப்பிள்ளை, சு., (உ.ஆ.), 2007, பதிற்றுப்பத்து, முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.

9. இந்திரபாலா, கா., 2006, இலங்கையில் தமிழர், முதற்பதிப்பு, குமரன் புத்தக நிலையம், சென்னை, கொழும்பு.

10. பரமசிவன், தொ., 2001, பண்பாட்டு அசைவுகள், முதற்பதிப்பு, காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில்.

11. சிங்காரவேலு முதலியார். ஆ., 1981, அபிதான சிந்தாமணி, முதற்பதிப்பு, ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், சி – 2/15, எஸ்.டி.எ., புதுதில்லி – 110016.

12. கதிரைவேற் பிள்ளை. ந., 1981, தமிழ்மொழியகராதி, முதற்பதிப்பு, ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், சி – 2/15, எஸ்.டி.எ., புதுதில்லி – 110016.

13. Thomas Lehmann And Thomas Malten, 1993, A WORD INDEX FOR CANKAM LITERATURE, 2nd Edition, Institute Of Asian Studies, Chemmancherry, Chennai – 19, Tamilnadu, India.

# ஆங்கிலச் சொற்களுக்கு இணையான புதிய தமிழ்க் கலைச்சொல் அகராதி உருவாக்க அரசாணை வெளியீடு !

# முதற்கட்டமாக மருத்துவத்துறைக் கலைச்சொல் அகராதி உருவாக்க ஏற்பாடு!






தமிழ்நாடு, தமிழ்வளர்ச்சித்துறை 2022–2023ஆம் ஆண்டிற்கான மானியக் கோரிக்கை அறிவிப்பின்படி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வழியாக, ஆங்கிலச் சொற்களுக்கு இணையான புதிய தமிழ்க் கலைச்சொல் அகராதி உருவாக்கி வெளியிட இசைவளித்தும், நடப்பு 2022–2023ஆம் நிதியாண்டிற்கு 12,15,490ரூபாயும், 2023–2024ஆம் நிதியாண்டு முதல் தொடர் செலவினமாக 11,66,000 ரூபாயும் நிதி ஒதுக்கீடு செய்து தமிழ்நாடு அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

இந்த அரசாணையின்படி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககமானது வளர்ந்துவரும் நவீன தொழில்நுட்பத்திற்கேற்ப அனைத்துத் தளங்களிலும் தமிழ்ப் பயன்பாட்டினை அதிகரிக்கச் செய்யும் வகையில், மருத்துவம்,

பொறியியல் தொழில்நுட்பம் போன்ற துறைகளில் பயன்படுத்தப்படும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான புதிய தமிழ்க் கலைச்சொற்கள் உருவாக்கப் பணியினைத் தமிழ்நாடு பாடநூல் (ம) கல்வியியல் பணிகள் கழகத்துடன் இணைந்து, துறைசார் வல்லுநர்களைக் கொண்ட குழுக்களை அமைத்து, புதிய கலைச்சொல் அகராதிகளை உருவாக்கி வெளியிடவுள்ளது.

இக்கலைச்சொல் அகராதி உருவாக்கம் தொடர்பான முதல்கூட்டம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 22.11.2022ஆம் நாள் நடைபெற்றது. அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற இக்கூட்டத்தில், தமிழ்நாடு டாக்டர் எம்.ஜி.ஆர். மருத்துவப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் சுதாசேசையன், தமிழ்நாடு பாடநூல் (ம) கல்வியியல் பணிகள் கழக இணை இயக்குநர் முனைவர் சங்கர் சரவணன், மதுரை உலகத் தமிழ்ச் சங்க இயக்குநர் முனைவர் பா. அன்புச்செழியன், தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல்துறைத் தலைவர் முனைவர் உல. பாலசுப்பிரமணியன், சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, அகரமுதலி இயக்கக மேனாள் பதிப்பாசிரியர் முனைவர் மு. கண்ணன் ஆகியோர் பங்கேற்றுத் தம் கருத்துரைகளை வழங்கினார்கள்.

முதற்கட்டமாக நடப்பு 2022–2023ஆம் நிதியாண்டில் மருத்துவத்துறைக் கலைச்சொற்களைத் தொகுத்து 300 பக்கம் கொண்ட அகராதியாக வெளியிட முடிவுசெய்யப்பட்டது. அதற்காக, ஏற்கெனவே உள்ள மருத்துவத்துறை சார்ந்த நூல்களிலிருந்து கலைச்சொற்களைத் தொகுத்தல், பொருத்தமான கலைச்சொற்களைத் தரப்படுத்துதல், மருத்துவத்துறை சார்ந்த புதிய வரவு ஆங்கிலச் சொற்களுக்குத் துறைசார் வல்லுநர்களின் உதவியுடன் தமிழ்க்கலைச்சொல்லாக்கம் செய்தல், சொல் – பொருள் – இடம் நோக்கிக் கலைச்சொற்களை உருவாக்குதல், பொருள் நெருடல் உள்ளபோதும் புழக்கத்திற்கு வந்துவிட்ட கலைச்சொற்களை வழுவமைதியாகக் கொண்டு அடைப்புக்குறிக்குள் பொருத்தமான கலைச்சொற்களை கொடுத்தல் உள்ளிட்ட கருத்துரைகள் கூட்டத்தில் முன்மொழியப்பட்டன.

கூட்டத்தில் அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 121–ஆவது கூட்டம்




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 19.11.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 121–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், திரு.அ.மதிவாணன், திரு.நா.சு.சிதம்பரம், அலுவல்சார் உறுப்பினர்கள் மற்றும் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு ஆகியோர் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 260 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 122–ஆவது கூட்டம்




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 26.11.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 122–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், திரு.அ.மதிவாணன், திரு.நா.சு.சிதம்பரம், அலுவல்சார் உறுப்பினர்கள் மற்றும் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு ஆகியோர் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 300 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

மொழியின் வளம் காட்டும் அளவுகோல் அதன் சொற்களே ஆகும். அருந்தமிழின் சொல்வளத்தில் காலந்தோறும் கலைச்சொற்கள் இன்றியமையாப் பங்குவகித்துள்ளன. இந்நிலையில், இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 60–63 வரையிலான அமர்வுகள் 2022 நவம்பர் 18, 25, திசம்பர் 02, 09ஆகிய நாள்களில் நடைபெற்றன. 60ஆவது அமர்வில் சேலம், பெரியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை மேனாள் பேராசிரியர் முனைவர் பெ. மாதையன் அவர்களும், பாரிசு நாட்டைச் சேர்ந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச. சச்சிதானந்தம் அவர்களும் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தார்கள். பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 60ஆவது அமர்வில் வாழ்த்துரை வழங்கியவர்கள்

முனைவர் பெ. மாதையன்
மேனாள் பேராசிரியர்
தமிழ்த்துறை,
பெரியார் பல்கலைக்கழகம்,
சேலம்



முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்(கல்வி)
தமிழாய்வு நிறுவனம், பாரிசு



## 18.11.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

முனைவர் ஞானா பியாற்றிஸ்
நிருவாக இயக்குநர், பன்னாட்டு உயர் (கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு



தகைசால் பேரா. வீ. ரேணுகா தேவி
மேனாள் துறைத்தலைவர்,
மொழியியல் துறை,
மதுரை



திரு. இங்கர்சால்
மின்னச்சன்,
வள்ளுவர் வள்ளலார் வட்டம், நார்வே



முனைவர் செள. வீரலெட்சுமி
துறைத்தலைவர், மொழிபெயர்ப்புத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்



திருமதி றொ. சிவனேஸ்வரி (எ) நக்கீரன் மகள்
ஏதிலிகள் சங்க மதியுரைஞர்,
டென்மார்க்



## 25.11.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

பேரா. முனைவர் **தமிழ்நேசன் அடிகளார்**
**இலங்கை**



முனைவர் **மெய். சித்ரா**
பகுதிநேர விரிவுரையாளர், ஸ்கோப்,
ஹாங்காங் மாநகர் பல்கலைக்கழகம்,
ஹாங்காங்



முனைவர் **வே. அருட்பாமணி**
தமிழியல் ஆய்வாளர், காஞ்சிபுரம்



## 02.12.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

பேரா. முனைவர் **பெ. ஹரிபாலன்**
ஹன்யாங் பல்கலைக்கழகம், சீயோல்,
தென்கொரியா





திரு. **வி.இ. குகநாதன்**
எழுத்தாளர், ஒன்றிணைந்த அரசகம்



திருமதி **சாந்தினி சம்புலிங்கம்**
எழுத்தாளர், டென்மார்க்



பேரா. **இ. பேச்சிமுத்து**
மேனாள் துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
தியாகராசர் கல்லூரி, மதுரை



திரு. **அகநம்பி (எ)**
**தி. பாலசுப்பிரமணியன்**
எழுத்தாளர், வெளியீட்டாளர்,
சென்னை

## 09.12.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

மரு. முனைவர் **யோசெப்யூட்**

துணைப் பேராசிரியர்,
மருந்தியல் ஆராய்ச்சித்துறை, நியூசெர்சி,
அமெரிக்கா



**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**

உரையாசிரியர், நூல் மதிப்புரையாளர்,
சென்னை



**கவிஞர் அம்பலவன் புவனேந்திரன்**

தமிழாசிரியர், செருமனி



**செல்வி மஞ்சு கிருஷ்ணன்**

உதவிப் பேராசிரியர்,
கட்டடவியல் துறை,
வேல்ஸ் அறிவியல் (ம)
தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி
நிறுவனம், சென்னை



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

**திருமதி ஞானா பியாற்றிஸ்**

Ego surfer – இணையச் செருக்கன்
Dudevorce – ஈர்ஆண் நட்புவிலகல்
Grammarphobia – இலக்கணவச்சம்

**திரு. இங்கர்சால்**

Cloud Security – முகிலகப் பாதுகாப்பு
Cloud Strategy – முகிலகவுத்தி
Money Clouds – பணமுகிலகம்

**திருமதி றொ. சிவனேஸ்வரி (எ) நக்கீரன் மகள்**

Nature guide – இயற்கை வழிகாட்டி
Housing help– உறைவிட உதவி
Frost spray – உறைபனி உருக்கி

**தகைசால் பேரா. வீ. ரேணுகா தேவி**

Tagmemics – வகையுறவனியல்
Glossematics – சொற்கூற்றியல்
Semantics – பொருண்மையியல்

**முனைவர் சௌ. வீரலெட்சுமி**

Clubhouse – பேச்சகம்
Shots – குறுங்காணொலி
Display Picture – காட்சிப்படம்

**அருட்திரு. தமிழ்நேசன் அடிகளார்**

Paddy Store – காடாங்கி
Yoke – வள்ளக்கை
Church authorities –கட்டளைக்காரர்

**முனைவர் மெய். சித்ரா**

Failsafe – வழுக்காப்பு
Bootstrap – மாறுபாட்டு மதிப்பீடு
Interobserver – இடைநோக்கர்

**முனைவர் வே. அருட்பாமணி**

Mal adjustment – பொருத்தப்பாடின்மை
Over protection – பேர் அக்கரைப்பேணல்
Sweet grapism – தன்னிலைத் தன்னிறைவு

**பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்**

Tissue– உயிரணுத்தொகுப்பு
Exosome– உயிரணு வேதியூக்கி
Molecular Pathway– மூலக்கூறு வழித்தடம்

**திரு. வி.இ. குகநாதன்**

ICE scraper – ஆலியகற்றி
Ice dam – ஆலியணை
Zero degree – சுழியப்பாகை

**திருமதி சாந்தினி சம்புலிங்கம்**

Bed warmer – படுக்கை சூடாக்கி
Leaf vacuums – சருகு உறிஞ்சி
Snow Sweeper – வெண்பனி அகற்றி

**பேரா. இ. பேச்சிமுத்து**

Cementum – பிணைப்புத்திசு
Incisor – வெட்டுப்பல்
Canine – கூர்ம்பல்

**திரு. அகநம்பி (எ) தி.பாலசுப்பிரமணியன்**

Over Line – பட விளக்க வரி
Eyebrow – உச்சி வரி
Copy Taster – செய்தி ஆய்வர்

**மரு. முனைவர் யோசெப்யூட்**

Telocyte – நீட்சிக்கலம்
Epigenetics – மேலாண் மரபியல்
Paracrine – அயல்சுரப்பி

**கவிஞர் அம்பலவன் புவனேந்திரன்**

Susbension railway– தொங்கு தொடரி
Meat bun – கறியப்பம்
Snow sold – பனி உப்பு

**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**

Granola–காலைப் பயிருணவு
Pansy–ஒளிர் குறும்பூ
Snappy speech–சுருக்கச் சுவையுரை

**செல்வி மஞ்சு கிருஷ்ணன்**

Aggregate – பருஞ்சாளி
Lamination – பழிஞ்சிட்டு
Healing Concrete – சேப்பமுறல்